[18th August 1961

*Magistrates' Courts (Vellore)*

* 1240 *Q.*—**Sri S. M. ANNAMALAI (on behalf of Sri M. P. SARATHI) :** *கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) வடாற்காடு மாவட்டம் வேலூர் நகரில் ஜில்லா மாஜிஸ்டிரேட், உதவி முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் கோர்ட்டுகள் கட்டுவது எந்த அளவுக்கு நிறைவேறியுள்ளது ?*

*(இ) அதற்காக 1960-61-ல் ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?*

*(உ) இதுவரை செலவாகியுள்ள தொகை எவ்வளவு ?*

*(எ) இவ்வாண்டு முடிவதற்குள்ளாகவே அந்த வேலை முடிவடைந்துவிடுமா ?*

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (அ) Construction of the buildings for housing the courts of the District Magistrate and Additional First-class Magistrate, Vellore, are progressing simultaneously and both have come up to roof level.

*(இ)* Nil.

*(உ)* Rs. 77,100.

*(எ)* Both the buildings will be completed before the end of this calendar year.

*New bus routes (Madurai district)*

* 1241 *Q.*—**Sri N. R. THIAGARAJAN :** *கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) மதுரை ஜில்லாவில் 1959 ஏப்ரல் 1-ம் தேதி முதல் எத்தனை புது பஸ் மார்க்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன ?*

*(இ) எங்கெங்கு ?*

*(உ) இதுவரை பஸ்கள் ஓடாத புதிய பாதைகளில் எங்கெங்கு பஸ் விடப்பட்டது ?*

The Hon. Sri V. RAMAIAH : (அ), (இ) & (உ) A statement [a] giving the particulars is placed on the table of the House.

**Sri R. KRISHNASWAMY NAIDU :** *பஸ் மார்க்கங்கள் ஏற்படுத்துவதற்குத் தகுதியாக 1949, 1950-ம் ஆண்டுகளிலேயே ரோடு வேலை பூர்த்தி பெற்ற இடங்களில், லெவல் கிராஸிங் இல்லாத காரணத்தினால் பஸ் வர முடியாத கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. ரெயில்வேயில் இதைச் செய்வதற்கு அதிகப் பணம் கேட்கிறார்கள். ஜில்லா போர்டோ, பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலோ 50,000 அல்லது 60,000 ரூபாய் லெவல் கிராஸிங்குக்காகப் பணம் செலுக்க*

---

[a] Printed as Appendix II on pages 128–129 infra.

முடியாத அளவுக்கு அங்கே நிதிக் கஷ்டம் இருக்கிறது. அதனால் அரசாங்கம் ஏதேனும் ஒரு நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியுமா ?

THE HON. SRI V. RAMAIAH : This does not arise out of the main question.

*Kalambur High School*

* 1242 *Q.*—**SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்ற ஆண்டு வடாற்காடு மாவட்டம் களம்பூர் உயர் நிலைப்பள்ளியில் எஸ்.எஸ்.எல்.ஸி. பரிசைஷயில் தேர்ச்சி பெறாத பிள்ளைகள் இவ்வாண்டு பள்ளியில் சேர்த்துக் கொள்ளப் பட்டார்களா ?

(இ) இல்லையானால் காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) The admission of supplementary pupils would have necessitated the opening of a third section which was not possible due to lack of accommodation in the school.

**SRI S. M. ANNAMALAI :** ஸார், அதே பள்ளியில் பல வகுப்பு களுக்கு இரண்டாவது செக்ஷன், மூன்றாவது செக்ஷன் ஓபன் செய்திருக்கும்போது, இந்த ஒன்றுக்கு மட்டும் ஏன் போதிய இடம் இல்லை என்ற காரணம் காட்டி பிள்ளைகள் சேர்க்கப்படவில்லை என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** நாம் முதலில் முடிவு செய்யவேண்டியது, ஃபெயில் ஆகும் பிள்ளைகளுக்கு முதலிடம் கொடுக்கவேண்டுமா அல்லது தேர்வு பெற்று வரும் பிள்ளைகளுக்கு முதலிடம் கொடுக்கவேண்டுமோ என்பது. 'ஃபெயில் ஆகும் பிள்ளைகளுக்குத் தான் பள்ளிக்கூடம் இருக்கவேண்டும். பாக்கிப் பேர்கள் வீட்டில் இருக்க வேண்டும்' என்று சொன்னால் அங்கத் தினருடைய யோசனையை ஏற்றுக்கொள்ள முடியும்.

**SRI S. M. ANNAMALAI :** ஃபெயில் ஆகும் பிள்ளைகளைச் சேர்க்காமல் இருக்கலாம். ஆனால் பெண்களையாவது சேர்த்துக் கொள்ளக் கூடாதா ? அவர்கள் 10 மைல் நடந்து சென்று படித்து விட்டு வரவேண்டியிருக்கிறதே. அதற்கு ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** எத்தனை பெண்கள் சேர்க்கப்படவில்லை என்ற விவரம் என்னிடத்தில் இல்லை. உண்மை யில் சேர்க்கப்படவில்லையா என்று கனம் அங்கத்தினருக்குக் கூடத் தெரியுமோ என்னவோ தெரியாது. பெண்களைப் பொறுத்த வரையில் அநேகமாக அவர்கள் ஃபெயில் ஆவதில்லை.